4th March 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கன்னியாகுமரி மாவட்டத்தில்தான் ரப்பர் பயிரிடுவதற்கு லாயக்காக இருக்கிறது என்று இந்தத் திட்டம் எடுத்துக்கொள்ளப்பட்டது. வேறு பிராந்தியங்களில் இப்போது விஸ்தரிப்பதாக இல்லை.

DR. (SRIMATHI) SOUNDARAM RAMACHANDRAN: மணி முத்தாறு போகிற வழியிலே, அதாவது நீர்த்தேக்கம் இருக்கிற வழியிலேயும், அதற்கடுத்து மாஞ்சோலை முதலிய இடங்களிலும் ரப்பர், தேக்கு முதலியவை நன்றாக வரும் என்று சொல்லுகிறார்கள். அந்த வட்டாரத்தில் இப்பொழுது ஒரு குறிப்பிட்ட அளவில் இதைப் பயிர் செய்து வருகிறார்கள். இதை விஸ்தரிப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா? இந்த 700 ரூபாய் முதல் வருஷத்திலே ஒரு ஏக்கர் நிலத்தைப் பயிர் செய்வதற்கு செலவழிக்கப்பட்டதா? இதைக் காட்டிலும் குறைந்த செலவில் வேறு இடங்களில் இதைப் பயிரிட சர்க்கார் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இந்த 700 ரூபாய் முதல் வருஷத்திலே ஏற்பட்ட செலவு. மேற்கொண்டு செலவு குறையுமென்றுதான் எதிர்பார்க்கப்படுகிறது. இப்பொழுதுதான் திட்டம் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. இதைப்பற்றி மேலும் பரிசீலனை செய்த பிறகுதான் வேறு இடங்களுக்கு விஸ்தரிப்பதைப் பற்றி அரசாங்கம் கவனிக்க முடியும்.

*Kundah Project*

* 580 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the generator in the first stage of Kundah is working to its capacity ?

THE HON. SRI V. RAMAIAH : Yes, sir.

SRI A. A. RASHEED : What is the capacity of the generator What is the present production of electricity?

THE HON. SRI V. RAMAIAH : For the first generator and first power house, it is 20,000 KW. With the present generator, both the generators in the First power house are generating electricity. Two generators in the second power house also generate power.

*Electric power supply*

* 581 Q.—SRI M. P. SARATHI: கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்யத்திற்கு எந்தெந்த அண்டை ராஜ்யங்களிலிருந்து எவ்வளவு மின்சாரம் வாங்கப்படுகிறது?

(இ) எந்தெந்த அண்டை ராஜ்யங்களுக்கு எவ்வளவு மின்சாரம் வழங்கப்படுகிறது?

(உ) கேரள ராஜ்யத்திலிருந்து அதிக மின்சாரம் கேட்டு கோரிக்கை வந்ததா?

(எ) அதனுடைய முடிவு என்ன?

[4th March 1961

THE HON. SRI V. RAMAIAH : (a) Bulk supply of power is being obtained up to a maximum demand of 3,560 K.V.A. from Kerala State and 3,000 K.V.A. from Andhra Pradesh.

(b) Bulk supply of power is being made from this State to the adjoining States up to a maximum demand of 12,370 K.V.A. to Kerala Stete, 6,625 K.V.A. to Pondicherry State and 700 K.V.A. to Andhra Pradesh.

(c) Yes, Sir. Requests were received for an additoial supply of 10,000 K.W. to meet the power demand of Messrs. Fertilizers and Chemicals Limited, Alwaye and additional supply of 400 K.W. at the Uppatti point to meet the increased load demand in Malabar area.

(d) In view of the acute power position in this State, their requests were not complied with.

SRI M. P. SARATHI: நமக்கே மின்சாரம் பற்றுக்குறையாக இருந்து வெளி மாகாணங்களிலிருந்து வாங்கும்பொழுது, நாம் இன்னொரு மாகாணத்திற்கு மின்சாரம் வழங்குவது எந்த அடிப் படையில் பொருந்தும் ?

THE HON. SRI V. RAMAIAH : நமது மாகாணத்திலே மட்டு மல்ல. பக்கத்து மாகாணங்களிலும் மின்சாரப் பற்றுக்குறை இருக்கிறது. ஒவ்வொருவரும் சில இடங்களில் கொடுத்து உதவி செய்ய வேண்டியிருப்பதால், நாம் அவர்களிடமிருந்து வாங்கு கிறோம். நாமும் சில கட்டத்தில் அவர்களுக்குக் கொடுக்கிறோம்.

SRI S. M. ANNAMALAI : நம்முடைய மாநிலத்திலிருந்து பிற மாநிலங்களுக்குக் கொடுக்கப்படும் மின்சார சக்தி எந்தவிதமான பண அடிப்படையில் மாற்றிக்கொள்ளப்படுகிறது. அப்படியானல் பிற மாகாணங்களிலிருந்து நாம் வாங்குகிற மின்சார சக்திக்கு பணம் அதிகமாக வழங்கப்படுகிறதா ? இந்த மாநிலத்திற்கும் பிற மாநிலங்களுக்குமுள்ள வித்தியாசம் எவ்வளவு என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI V. RAMAIAH : பிற மாகாணத்திலிருந்து நமக்கு எவ்வளவு மின்சார சக்தி கிடைக்கும், நாம் எவ்வளவு கொடுக்க முடியுமென்பதுதான் இப்பொழுது அரசாங்கத்தின் முன்பு இருக்கக்கூடிய பிரச்னை. எவ்வளவு பணம் கொடுக்கவேண்டு மென்பது பிரச்னையல்ல. எவ்வளவு பணம் கொடுத்தாவது மற்றவர் கள் வாங்குவதற்குத் தயாராயிருக்கிறார்கள். இப்பொழுது பிரச்னையெல்லாம் எப்படி அதிகமாக சக்தியை வாங்கமுடியும் என்பதுதான். எந்த ஒப்பந்தத்திற்கு வந்தாலும், நன்றாகப் பரிசீலனை செய்தபிறகுதான் முடிவு எடுக்கிறோம்.

*Primary education*

* 582 Q.—SRI T. S. RAMASWAMI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) the places where compulsory primary education has been introduced;

(b) the basis on which these places are chosen ; and